# பட்டிப் பறவைகள்

பெ. தூரன்

விற்பனை உரிமை:

பாரி நிலையம்

59, பிராட்வே · சென்னை-1.

# முன்னுரை

இருபத்தாறு ஆண்டுகளுக்கு முன்னால் நடந்த ஒரு நிகழ்ச்சி. நினைத்தாலும் எனக்கு உள்ளத்திலே தேன் ஊறு கிறது.

அப்பொழுது நான் கல்லூரியிலேபடித்துக் கொண்டிருந் தேன். நானும் என் நண்பன் ஒருவனும் ஒரே மாணவர் விடு தியில் இருந்தோம். நண்பன் பொங்கல் விழாவிற்காகத் தன் சொந்த ஊருக்குப் பல நாள் முன்னதாகவே போயிருந்தான். நாங்கள் இருவரும் கொங்குநாட்டு வேளாளர்கள்; உற வினருங்கூட. எங்களுக்குப் பொங்கல்தான் மிக முக்கிய மான திருநாள்.

அவனைப் பிரிந்திருந்த எனக்கு என்னவோ போல இருந்தது.

பொங்கலுக்குப் பிறகு திரும்பி வரும்போது அவனுக்கு உகந்ததாக ஏதாவது ஒரு பரிசு அளிக்க வேண்டுமென்ற ஆவல் என் உள்ளத்திலே பொங்கியது.

இன்றுபோல அந்தக் காலத்திலே பொங்கல் வாழ்த்து அனுப்பும் வழக்கம் ஏற்பட்டிருக்கவில்லை. இருந்தாலும் பொங்கல் வாழ்த்தாக அவனுக்கு ஏதாவது கொடுக்க வேண் டும் என்று நான் ஆவல் கொண்டேன்.

பொங்கல் வாழ்த்து என்று தலைப்பிட்டு ஒரு சிறிய அழ கான நோட்டுப் புத்தகத்தில் பக்கத்திற்கு ஒன்றாகப் பல கவிதைத் துணுக்குகளை எழுதி அவனுடைய பெட்டியிலே மறைவாக வைத்துவிட்டேன்.

1930-ஆம் ஆண்டிலே தைப் பொங்கல் நாளன்று இது நடந்தது. ஒரு வாரம் அதே பணியில் ஈடுபட்டிருந்து அன்று முடித்தேன்.

அந்தப் பொங்கல் பரிசில் நானே சொந்தமாக எழுதியவைகளும் கவி ரவீந்திரநாத தாகூரின் விடுதிப் பறவைகள் (Stray Birds) என்ற நூலிலிருந்து மொழி பெயர்த்தவைகளும், வேறு சில மொழிபெயர்ப்புகளுமாகப் பல சிறு சிறு துணுக்குகள் அடங்கியிருந்தன. நானே எழுதிய சற்று நீண்ட கவிதைகளும் இருந்தன.

எனது நண்பன் என்மேலுள்ள அன்பினுலோ, நான் எழுதியவற்றில் உண்மையான சுவை கண்டோ, இவ்விரண்டின் கூட்டு வலிமையாலோ பல ஆண்டுகள் வரை அந்தப் பொங்கல் பரிசைக் காப்பாற்றி வைத்திருந்து, பிறகு என்னிடம் கொடுத்து, அச்சிட்டு வெளியிடும்படி கூறினுன். அவற்றைப் பாராட்டியும் பேசினுன். அது அவனுடைய அன்பின் மிகுதியைக் காட்டுவதாகவே நான் கொண்டேன்.

என் நண்பனுடைய விருப்பத்தை நிறைவேற்ருமல் நீண்ட காலம் கடத்திவிட்டேன்.

ஆனுல், அண்மையிலே தற்செயலாக அந்தப் பொங்கல் பரிசை எடுத்து ஆராய நேர்ந்தது.

அதில் உள்ள கவிதைத் துணுக்குகளும், எண்ணத் துணுக்குகளும் புதியதோர் வலிமையோடு என்னைக் கவர்ந்தன. இதுவரை செய்யத் தவறிய காரியத்தைச் செய்து முடிக்கவேண்டுமென்ற ஆவலும் பிறந்தது.

பொங்கல் பரிசில் உள்ள சில கவிதைகள் முன்பே ‘இளந் தமிழா’ என்ற தலைப்புள்ள என் கவிதை நூலில், சேர்ந்துவிட்டன. அவற்றையும் வேறு சில பகுதிகளையும்

நீக்கிவிட்டு மற்றவற்றை இந்த நூலில் வெளியிட்டிருக்கி றேன். புதிதாக நான் எழுதிய பல துணுக்குகளும் இதில் சேர்ந்துள்ளன.

பொங்கல் பரிசிலுள்ள சிறு துணுக்குப் பகுதிக்கு 'பட்டிப் பறவைகள்' என்று நான் அன்று தலைப்பிட்டிருந் தேன். அதே தலைப்பை இந்நூலுக்குக் கொடுத்திருக்கி றேன். ஆடு மாடுகளை அடைத்துவைக்கும் பட்டியைவிட்டு நீங்கித் தனியாகச் சுற்றித் திரியும் மாட்டைப் 'பட்டி மாடு' என்று கூறுவார்கள். பட்டியிலே அடைக்கும் மாட்டுக்கும் அதே பெயர் உண்டு. 'காவலில்லாதவன்' என்ற பொருளில் பட்டி என்ற சொல் வழங்கும். "கோதை பரிந்து, வரிப்பந்து கொண்டோடி, நோதக்க செய்யும் சிறு பட்டி" என்று வந்திருப்பதைக் காண்க (கலித் தொகை குறிஞ்சிக்கலி 15) "பட்டி போன்று வேண்டிய வாறே ஒழுகலின் பட்டி யென்றார்" என்று பரிமேலழகரும் திருக்குறள் உரையில் கூறுகிறார் (குறள் 1074).

'பட்டிப் பறவைகள்' என்ற பெயர் என் நண்பனுக்குப் பெரிதும் பிடித்திருக்கிறது. மேலே குறிப்பிட்ட ரவீந்திரநாத தாகூரின் நூலுக்குத் தமிழ்ப்பெயராகக் கொடுக்கவும் இந்தத் தலைப்புப் பொருத்தமாக இருக்கிறதென்று எனக்குத் தோன்றுகிறது.

தாகூரின் நூலிலிருந்து மொழிபெயர்த்த 50 துணுக்கு கள் இங்கு சேர்க்கப்பட்டுள்ளன. அவற்றை இந்நூலில் வெளியிட மாக்மில்லன் அண்டு கம்பெனி லிமிட்டெடும், ரவீந்திரநாததாகூர் டிரஸ்டும் அன்புடன் அனுமதி தந்தன. அவைகளுக்கு என் மனமார்ந்த நன்றி உரியது.

இந்நூலை இரண்டு பகுதிகளாகப் பிரித்திருக்கிறேன். முதற் பகுதியில் தாகூரின் நூலிலிருந்து மொழி பெயர்த்த

வைகளும், இரண்டாம் பகுதியில் நானே சொந்தமாக எழுதியவைகளும் அடங்கியுள்ளன.

இந்நூலைப் படிக்கும் அன்பர்களிடம் நான் ஒன்று கேட்டுக் கொள்கிறேன். ஒரே மூச்சில் எல்லாவற்றையும் படிக்காதீர்கள். அப்படிப் படிக்க இத் துணுக்குகள் ஏற்பட்டவையல்ல. ஏதாவது ஒன்றைப் படித்துவிட்டு அதையே சற்று அமைதியாகச் சிந்தித்துப் பாருங்கள். உங்கள் உள்ளத்தைத் தூண்டவும் விரிந்து விரிந்து பொருள் கொண்டு சிந்தனை அலைகளை எழுப்பவும், புதிய கலையனுபவத்தை உண்டாக்கவும் அதுவும், அதைப் போலவே மற்றவைகளும் உதவுமானால் எனது நோக்கம் நிறைவேறியதாகக் கொள்வேன். என் நண்பனுக்கு நான் கொடுத்த பரிசும் வீண் போகாது.

பொங்கல் திருநாள்,
1956.

பெ. தூரன்

## இரண்டாம் பதிப்பின் முகவுரை

பட்டிப் பறவைகளின் வனப்பை உணர்ந்து அன்பர்கள் மகிழ்ந்ததற்கு இப்புதிய பதிப்பே சான்றாக அமைகிறது. அவர்களுடைய சுவையுணர்ச்சியைப் பாராட்டி என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

திருந்திய பதிப்பாக வரும் இது முதற் பதிப்பைவிடக் கவிதைச் சுவை மிகுந்தது என்பது என் துணிபு.

பொங்கல் திருநாள்,
1961.

பெ. தூரன்

## மூன்றும் பதிப்பின் முகவுரை

பொங்கலுக்கு அன்பளிப்பாகத் தோன்றிய இந்நூலை மீண்டும் ஒரு பொங்கல் திருநாளிலேயே மூன்றும் பதிப்பாக வெளியிடும்போது என் உள்ளம் பூரிப்படைகிறது. நாற்பத்தெட்டு ஆண்டுகளுக்கு முன்னால் கல்லூரி மாணவனாக இருந்தபோது நடந்த இன்ப நிகழ்ச்சி இன்று என் முன் தோன்றி உள்ளத்தை இன்பத்தில் நிறைக்கின்றது. பொங்கல் வாழ்த்து மடல்கள் வழக்கிற்கு வராத காலத்தில் உருவானதல்லவா இது?

பொங்கல் திருநாள்,
1969.

பெ. தூரன்

## சமர்ப்பணம்

### கே. எஸ். பெரியசாமிக்கு

அன்பைப் பற்றி வெளிப்படையாகப் பிறரிடம் பேசினால் அதன் மாற்றுக் குறைந்து போகும் என்பாய். அதனால் நான் அதைப் பற்றிப் பேசவில்லை. ஆனால் கலையின் சுவை யறிந்து போற்றும் உன் பண்பைப்பற்றி நான் பேசக்கூடாதா? பரிசாக உனக்களித்த இந்த நூலாவது பேசட்டும்.

பகலவன் மறைந்ததற்காக அழுதால் விண்மீன்களையும் காண முடியாது.



இளஞ்சிறு மலர் தன் இதழ்களை விரித்துக் கூவுகிறது : ''அருமை உலகே, வாடாமலிரு.''

“எனது கடமைகளை ஏற்றுக்கொள்ள இங்கு யார் இருக்கிறார்கள்?” என்று மறையும் கதிரவன் கேட்டான்.

“தலைவனே, என்னால் இயன்றதைச் செய்கிறேன்” என்று மண் விளக்குக் கூறிற்று.



மரம் வெட்டியின் கோடரி தனக்குப் பிடி வேண்டுமென்று வேண்டிற்று.

மரம் கொடுத்தது.

நாங்கள் அந்நியர்கள் என்று ஒரு காலத்தில் கனவு கண்டோம்.

நாங்கள் அன்பர்கள் என்று விழித்தெழுந்தபோது உணர்ந்தோம்.



உனது உண்மை வடிவத்தை நீ பார்ப்பதில்லை ; நீ பார்ப்பது உன் நிழல்.

முதுகிலே விளக்கை வைத்துக் கொண்டு நடப்பவர்களின் நிழல் அவர்களுக்கு முன்னுலேதான் விழும்.



"நிலாவே, எதற்காகக் காத்திருக்கிருய்?"

"கதிரவனுக்கு வணக்கம் செலுத்தி அவனுக்கு வழிவிட."

மேகமாக இருக்கக் கூடாதா என்று பறவை ஏங்குகிறது.

பறவையாக இருக்கக்கூடாதா என்று மேகம் ஏங்குகிறது.



மலை வீழ் அருவி பாடுகிறது :

" விடுதலை பெற்ற பொழுதே பாட்டும் பெற்றேன்."

அம்பு தன்னை விட்டுப் புறப்படுவதற்கு முன்பு வில் அதனிடம் மெதுவாகக் கூறு கிறது: "உனது விடுதலையே எனது விடுதலை."



உனக்குப் பசியில்லையென்பதனால் உன் உணவைக் குறை சொல்லாதே.

நீ சிரித்தாய்; ஆனால் ஒன்றும் பேசவில்லை. இதற்காகத்தான் நான் நீண்டநாள் காத்துக் கொண்டிருந்தேன் என உணர்ந்தேன்.



நீரிலிருக்கும் மீன் மௌனமாக இருக்கிறது; நிலத்திலிருக்கும் விலங்கு ஒலி எழுப்புகிறது; வானிலிருக்கும் பறவை பாடுகிறது.

கடலின் மௌனத்தையும். நிலத்தின் ஒலியையும், வானத்தின் இசையையும் மனிதன் தன்னுள்ளே கொண்டிருக்கிறான்.

அவன் தன் படைக்கலத்தையே தன் கடவுளாகச் செய்துவிட்டான்.

படைக்கலம் வெற்றியடையும்போது அவன் தோல்வியடைகிறான்.



மின்மினிப் பூச்சிகளைப்போல் தோன்றுவதற்காக விண்மீன்கள் அஞ்சவில்லை.

மயிலுக்கு அதன் தோகை கனக்குமே என்று சிட்டுக்குருவி வருந்துகிறது.



கடவுள் மனிதனுக்குச் சொல்லுகிருர் : "நான் உன்னைக் குணப்படுத்துகிறேன்; அதனுல் துன்புறுத்துகிறேன்; உன்னிடம் அன்பு கொண்டிருக்கிறேன், அதனுல் தண்டிக்கிறேன்."

ஒளி கொடுப்பதற்காக விளக்கிற்கு நன்றி செலுத்து; ஆனல் அந்த விளக்கைத் தாங்கிக்கொண்டு நிழல் மறைவில் பொறுமையே வடிவமாக நிற்கிருனே அவனை மறந்துவிடாதே.



கடவுளுக்குப் பெரிய இராச்சியங்களின் மேல் சலிப்பேற்படுகிறது; ஆனல் சிறு மலர்களின்மேல் ஒருநாளும் சலிப்பில்லை.

கரை காணாத காதலிலே கற்பென்னும் செல்வம் தோன்றுகிறது.



கடவுளுக்கு இன்னும் மனிதனிடம் சலிப்பு ஏற்படவில்லை என்ற சேதியுடன் ஒவ்வொரு குழந்தையும் உலகில் தோன்றுகிறது.

நல்லது செய்ய விரும்புபவன் கதவைத் தட்டுகிறான்; அன்பு செய்கிறவன் கதவு திறந்திருக்கக் காண்கிறான்.



சாவில் பல ஒன்றாகும்; வாழ்வில் ஒன்று பலவாகும்.

கடவுள் செத்த காலத்தில் மதம் ஒன்றாகும்.

கலைஞன் இயற்கையின் காதலன்; அதனால் அவன் அவளுக்கு அடிமை; அவளுக்குத் தலைவன்.



"கனியே, என்னிடமிருந்து எவ்வளவு தொலைவிலிருக்கிறாய்?"

"பூவே, நான் உன் உள்ளத்தில் ஒளிந்திருக்கிறேன்."

அதிகாரம் உலகத்தைப் பார்த்துச் சொல்லிற்று: “நீ எனக்குச் சொந்தம்”.

உலகம் தனது அரியாசனத்தில் அதைக் கைதியாக வைத்தது.

அன்பு உலகத்தைப் பார்த்துச் சொல் லிற்று: “நான் உனக்குச் சொந்தம்.”

உலகம் தனது வீட்டின் சுதந்திரத்தை அதற்குத் தந்தது.



மங்கும் பகலுக்கு இரவு முத்தமிட்டு மெதுவாக அதன் செவியில் சொல்லுகிறது: “நான் சாவு, உனது தாய். நான் உனக்குப் புதுப் பிறவி கொடுக்க விரும்புகிறேன்.”

கரிய இரவே, காதலித்த மங்கையின் அழகை அவள் விளக்கை அணைத்த பிறகு உணர்வதுபோல நான் உனது அழகை உணர்கிறேன்.



மலரிலிருந்து தேனைக் குடித்த வண்டு கள் ரீங்காரம் செய்து தமது நன்றியை மலர் களுக்குத் தெரிவிக்கின்றன.

பலவித நிறங்களோடு பளபளக்கும் வண்ணத்துப் பூச்சிகள் மலர்கள்தாம் தங்க ளுக்கு நன்றி செலுத்தவேண்டும் என்று திண்ணமாய் நம்புகின்றன.

தவறுகள் எல்லாவற்றையும் வெளியே நிறுத்திக் கதவைத் தாளிடுவாயானால் உண்மையும் வெளியே நின்றுவிடும்.



கிளைகளிலே அழகாகப் பூக்களை மலரச் செய்ததற்காக மண்ணிற்குள் மறைந்து கிடக்கும் வேர்கள் பரிசு எதுவும் கேட்பதில்லை.

கடவுளின் பேராற்றல் மெல்லிய பூங் காற்றில் இருக்கிறது ; புயற்காற்றில் இல்லை.



மழைத் துளிகள் பூமியை முத்தமிட்டு மெதுவாகச் சொல்லுகின்றன : "அம்மா, உன் வீட்டைக் காணுமல் ஏங்கிப்போன குழந்தைகள் நாங்கள் ; வானிலிருந்து உன் னிடம் திரும்பி வருகிருேம்."

காதலே, துன்பம் என்னும் கொழுந்து விட்டெரியும் விளக்கை ஏந்தி நீ வரும்போது உனது முகத்தை நான் பார்க்க முடிகிறது; நீயே இன்பம் என்றும் அறிகிறேன்.



மின்மினிப் பூச்சி விண்மீன்களைப் பார்த்து, "உங்கள் ஒளி ஒரு காலத்தில் மங்கிவிடும் என்று கற்றறிந்தோர் கூறுகிருர்கள்" என்று சொல்லிற்று.

விண்மீன்கள் ஒரு பதிலும் கூறவில்லை.

ஆறுகள் எல்லாம் எனக்குத் தண்ணீர் வழங்குவதற்குத்தான் இருக்கின்றன என்று நினைக்க வாய்க்கால் ஆசைப்படுகிறது.



பெயரில்லாத ஒரு மலரைத் தனக்கு உறவு என்று ஏற்றுக்கொள்ளச் சூரியகாந் திப்பூ நாணியது.

சூரியன் எழுந்தான்; அந்தப் பெயரில் லாத மலரைப் பார்த்து, "என் அன்பே, நீ சுகமா?" என்று கேட்டுக்கொண்டே புன் முறுவல் செய்தான்.

சிறிய கிண்ணியிலுள்ள தண்ணீர் பளபளக்கிறது. கடலிலுள்ள தண்ணீர் இருண்டு தோன்றுகிறது.

சிறிய உண்மைக்கு விளக்கம் கூறத் தெளிவான சொற்கள் இருக்கின்றன; பெரிய உண்மைக்குப் பெரிய மௌனந்தான் உண்டு.



தாரகைகள் எல்லாவற்றையும் இழந்த காலைவானத்தை நோக்கி, " பனிச் சொட்டை இழந்துவிட்டேனே " என்று பூ கதறுகிறது.

மனிதனுடைய கரங்களிலிருந்து கடவுள் தனது மலர்களையே பரிசாகத் திரும்பிப் பெறுவதற்குக் காத்திருக்கிறார் !



எனது இறைவனே, உன்னைத் தவிர எல்லாவற்றையும் அடைந்தவர்கள் உன்னைத் தவிர வேறொன்றையும் அடையாதவர்களை ஏளனம் செய்கிறார்கள்.

சந்திரன் வானவெளியெங்கும் தன் வெண்சுடரை வீசுகிறான்; தன் களங்கத்தைத் தன்னிடமே வைத்துக்கொள்ளுகிறான்.



மழைத் துளி மல்லிகைப் பூவிடம் மெதுவாகச் சொல்லிற்று: "உன் உள்ளத்தில் என்னை என்றும் நிலையாக வைத்திரு."

அந்தோ என்று பெருமூச்செறிந்து மல்லிகைப்பூ தரையில் விழுந்தது.

அவர்கள் தங்கள் கோயிலிலேயே தங்கள் சொந்த விளக்கை ஏற்றி வைத்துச் சொந்தமான சொற்களால் பாடுகிருர்கள்.

ஆனல் பறவைகள் உனது காலை ஒளியில் உன் பெயரைப் பாடுகின்றன— ஏனென்ருல் உன் பெயர் ஆநந்தம்.



உனக்கு விருப்பமான பொழுது விளக்கை அணைத்துவிடு.

உனது இருளை நான் தெரிந்துகொண்டு அதைக் காதலிப்பேன்.

அரவமில்லாத இரவினிடத்தில் தாயின் அழகிருக்கிறது ; இரைச்சலோடு கூடிய பகலினிடத்தில் குழந்தையின் அழகிருக் கிறது.



நமது ஆன்மா தேடியதைச் சாவு திருட முடியாது என்பதை ஒரு நாளைக்கு நாம் அறி வோம் ; ஏனென்றால் ஆன்மாவின் தேட்டம் அதனுடன் ஒன்றாகி விடுகிறது.

எனது தலைவனே, என் வாழ்க்கையின் ஒவ்வொரு நரம்பும் சுதி கூட்டப்பெற்ருல், பிறகு நீ தொட்டபொழுதெல்லாம் அன்பின் இசை பொங்கும்.



உன் அன்பிலே எனக்கு நம்பிக்கை யுண்டு என்ற இதுவே என் இறுதிமொழி யாக இருக்கட்டும்.

என் கதவருகே இனிமையாகப் பாடிக் கொண்டு எங்கிருந்தோ ஒரு பறவை வருகிறது.

சற்று நேரத்தில் அது பறந்தோடி மறைந்துவிடும். ஆனால் அதன் இன்னிசை என் உள்ளத்தில் ஆழ்ந்து பதிந்து என்றும் தேனூறிக் கொண்டிருக்கும்.



“கவிதையே, உன்னை நான்தானே எழுதினேன்?” என்று கூறி எழுத்தாணி பெருமை கொள்கிறது.

ஓடத்தின் பாய்மரத்திலே விரிந்து நின்ற பாய், "நானல்லவா இத்தனை பெரிய ஓடத்தைத் தள்ளுகிறேன்" என்று செருக்கோடு வீங்கிப் புடைத்துக்கொண்டு கூறிற்று.

"உனது பெருமையே பெருமை!" என்று கூறிவிட்டுக் காற்றுத்தேவன் நின்று விட்டான்.

வலியிழந்து உயிரிழந்து வீழ்ந்தது பாய்.



பழுக்கக் காய்ந்த இரும்பூசியைப் பாய்ச்சித் தொளையிடுகிறவனை வேய்ங்குழல் வைது சாபம் கொடுக்கவில்லை.

அத் துன்பத்தைத் தந்து இசையென்னும் இன்பம் பொழியச் செய்கிறான் என்பதை அது உணர்ந்துள்ளது.

தாமரை மலரைப் பார்த்துக் காகிதப்பூ சொல்லுகிறது: "நீ நாளைக்கு வாடிவிடுவாயே!"



"மரமே, உன்னுடைய பசிய இலைகள் பழுத்துச் சருகாய் உதிர்வதை ஒவ்வோர் ஆண்டிலும் பார்க்கிறாயே, பிறகு எதற்காகப் புதிய தளிர்களை விடுகிறாய்?"

"சாவு என்னைத் தீண்டாமலிருப்பதற்காக."

“தோல்வியே, நீ எங்கே பிறக்கிறாய்?”

“வெற்றி அடைய வேண்டுமென்ற உறுதி எங்கு தளர்கிறதோ அங்கு நான் பிறக்கிறேன்.”



காலையில் வரப்போகிற கதிரவனின் ஒளியைக் காட்டிலும் உடனே கிடைக்கும் விளக்கொளி விட்டிலுக்கு மிகுந்த கவர்ச்சி தருகிறது.

தாஜ்மகாலுக்குச் சென்று சலவைக்கல் நோட்டம் பார்க்கிறவர்கள் உண்டு.

தாஜ்மகால் என்னும் கவிதை யணங்கு அவர்கள் கண்ணிலே படுவதில்லை.



பகலாகவே இருக்கக் கூடாதா என்று தேனீ ஆசைப்படுகிறது.

இரவாகவே இருக்கக் கூடாதா என்று குள்ளநரி ஆசைப்படுகிறது.

வானில் உயர்ந்து பறக்கும் கருடனை நோக்கிச் சேற்றில் நெளியும் புழு சொல்லுகிறது: "எவ்வளவு உயரப் பறந்தாலும் நீ பூமிக்கு வந்துதானே ஆகவேண்டும்?"



"கறையானை அழிப்பதற்கு இறைவன் என்ன செய்கிறான்?"

"அதற்கு இறகு கொடுக்கிறான்."

“இசையே, எல்லையில்லாத இன்பம் உன்னிடத்திலே எப்பொழுது பிறக்கிறது?”

“எனது தாய் தந்தையராகிய சுதியும் லயமும் வகுத்த எல்லையைக் கடவாது நிற்கின்றபோது பிறக்கிறது.”



வாழ்க்கை ஒரு பாலம். அதன் ஒரு முனை இந்த உலகத்திலிருக்கிறது; மற்றொரு முனை சுவர்க்கத்திலிருக்கிறது.

இந்தப் பாலத்தின் நேர் வழியைப் பின்பற்றாதவர்களும், குறுக்கே சென்றவர்களும் பிறவியாற்றினில் விழுந்து தடுமாறுகிறார்கள்.

குறுகி வளைந்து கோணலாகத் தன் னிச்சைப்படி கிடந்தபோது எஃகுக் கம்பியில் உயிர் இருக்கவில்லை.

வீணையிலே இழுத்துக் கட்டி முறுக்கிய போது அதனிடத்திலே அமுதமயமான உயிரிசை பிறந்தது.



"கடல்போல் ஆழமும் விரிவுங்கொண்டு பொங்குகிற என் காதலுக்கு இந்த உலகம் ஏன் எல்லை வகுக்க வேண்டும்?"

அந்தக் கடலையே கேட்டுப் பார்.

கடல் கூறுகிறது: "கரையைக் கடவாது நிற்கும்போது நான் உலகுக்கு இன்பந் தருகிறேன். கரை கடந்து பொங்கும் போது உலகை அழிக்கிறேன்."

“மேகமே, அஞ்சி நடுங்கும்படி எதற்காக இடித்து முழங்கித் துன்பந் தருகிறாய்?!”

“மழையைப் பெற்றுத்தர நான் படுகிற துன்பம் அது. துன்பமில்லாமல் இன்ப முண்டா?”



தென்றல் தேரிலேறி வந்த வசந்தன் மாமரத்தைத் தழுவினான்.

நாணிச் சிவந்து மெய்சிலிர்த்த மாமரம் பசுமையும் இளஞ்சிவப்புமான அழகிய ஆடையணிந்த இளங் கன்னியாக மாறினாள்.

அன்பே இளமையின் உயிர்.

கிணற்றுக்குள்ளே இருப்பவன் ஒரு சிறிய இடப்பரப்பையே காண்கிருன்.

மலையின் மேலே ஏறிச் செல்கிறவன் ஒவ்வொரு உயரத்திலும் உலகமும் வானும் விரிவடைவதை உணர்கிருன்.



பலாவின் கனியைச் சுவைத்து மகிழ்ந்து பாடுகிருன் கலைஞன்.

பலாவின் தோலிலுள்ள முள்ளை எண்ணிக் கணக்கிட்டுக் கொண்டிருக்கிருன் திறனாய்வாளன்.

வரண்டு உயிரற்றுப் போன சருகைக் கண்டு இளந்தளிர் நகைத்தது.

"நான் உயிரற்றுத் தோன்றினாலும் உனக்கு உயிர் கொடுக்கிறேன்" என்று கூறிக்கொண்டு தரையில் வேரடியில் விழுந்தது சருகு.



குயில் கறுப்பாக இருக்கிறதென்று அதன் பாட்டை வெறுப்பவர்கள் இல்லை.

மாம்பழத்தை உண்ணும்போது பலாப் பழத்தை நினைத்துக் கொண்டிருக்கிறவன் இரண்டின் சுவையையும் இழந்துவிடுகிருன்.



முத்தை யளித்த சிப்பி குப்பையிலே.

பிறகு அதை யார் கண்ணெடுத்துப் பார்க்கிருர்கள் ?

உனது வீட்டுக் கடிகாரத்தை ஓடாமல் செய்து விடுவதால் காலம் நின்று விடாது.



நான் என் சொந்த முயற்சியால் பாய் விரித்து இந்தப் பரந்த கடலில் முன்னேறிச் செல்லுவதாக எண்ணி இறுமாந்திருந்தேன்.

வானம் இருண்டு, மேகம் முழங்கி, இடி இடித்துக் கடல் கொந்தளித்தபோது செய் வகை யறியாது அலறிய சமயத்தில் கிடைத்த மின்னொளியிலே என் தோணிக்குச் சுக்கான் பிடித்திருப்பவன் நீ என்று உணர்ந் தேன்.

தோல்வியின் இடிக் குரலைக் கேட்டுச் சோர்வுறாத உறுதியுள்ள உள்ளத்திலே வெற்றியின் சங்கநாதம் ஒலிக்கிறது.



விசும்பிடைத் தோன்றும் வானவில்லின் வளைவிலே ஊஞ்சலிட்டு அதில் இன்பமாக ஆடலாம் என்று உலகை அழைக்கிறான் கவிஞன்.

அடுத்த கணத்திலே வானவில் மறைந்துவிடும் என்று கூறிக் கொண்டிருக்கிறான் விஞ்ஞானி.

முத்துப்போல இலை நுனியில் தொங்கிக் கொண்டிருக்கும் பனிச் சொட்டே, உனக்குப் பளபளப்பைக் கொடுக்கும் பகலவனின் கதிர் களில் மயங்கி விடாதே.!

சிறிது நேரத்தில் அந்தக் கதிர்களே உன்னை விழுங்கிவிடும்.



குழந்தையின் கோபம் மறு கணத்திலே சிரிப்பாக மாறி இன்பம் பயக்கிறது.

முதிர்ந்தவனுடைய கோபம் வஞ்சமாக மாறித் துன்பம் பயக்கிறது.

இறைவன் குழந்தைகளைத்தான் உல குக்கு அனுப்புகிறான்.

தான் பெற்ற நல்ல மழையை ஆறுக
உலகிற்கு வழங்குகிறது மலை.

தான் பெற்ற நல்ல மழையைத் தன்னுள்
ளேயே அடக்கிக் கொள்ளுகிறது பாலை
வனம்.



தலை நிமிர்ந்துநின்ற பெருமரங்களைப்
புயல் வேரோடு பறித்துத் தள்ளுகிறது.

தலைகுனிந்து நிலத்தோடு கிடந்த
நாணற் புல்லை அதனால் ஒன்றும் செய்ய
முடியவில்லை.

கற்பனை யென்னும் சிறகை விரித்து மனிதன் உயர உயரப் பறந்து வானுலகை எட்டிப் பிடிக்க முயல்கிறான்.

இந்தக் கற்பனை இல்லாது போனால் மனிதனுடைய வாழ்வும் மாறுதலில்லாத விலங்கு வாழ்க்கையாக முடிந்திருக்கும்.



"இரவே, முழு நிலவு காய்கின்றபோது நீ ஏன் இவ்வளவு குதூகலமாக இருக்கிறாய்?"

"பிரிந்த என் காதலன் கதிரவனிடமிருந்து நிலா இன்று முழு அன்பையும் பெற்று எனக்குக் கொண்டு வருவதை நீ காணவில்லையா?"

தரைக்கடியிலே, மிகுந்த ஆழத்திலே, தாங்க முடியாத அழுத்தத்திலே கொதித்துக் கனல்விட்டுக் கிடக்கும் கரித்துண்டுதான் வைரமாக மாறுகிறது.



"என்னைக் கட்டி இழுத்துப் பிடிக்கும் கயிறில்லா விட்டால் உயர உயரப் பறந்து வானத்தையே எட்டிப் பிடித்து விடுவேன்" என்று காற்றுடி துள்ளிக் குதித்தது,

காற்றுத் தேவன் கயிற்றை அறுத்து விட்டான்.

காற்றுடி தலைகீழாச் சுழன்று தரையிலே குப்புற விழுந்தது.

தனது தாளால் உண்ட நீரைத் தலையாலே தாங்கிக் கொடுத்து நன்றி தெரிவிக்கும் பண்பு தென்னைக்கு உண்டு.

அதனாலேதான் இறைவன் அதைத் தனக்கு விருப்பமான பொருளாக ஏற்றுக் கொண்டிருக்கிறான்.



சிப்பி வாழ்நாளெல்லாம் பட்ட துன்பத்தின் விளைவு ஒரு முத்து.

விட்டில் விளக்கைச் சுற்றிச் சுற்றி ஆடிக் களித்ததின் விளைவு ஒரு துளி சாம்பல்.

தன் கற்பனையின் வடிவத்தை, கல்லிலே காண்கிறான் சிற்பி; சொல்லிலே காண்கிறான் கவிஞன்.

எல்லையில்லாத தன் பிரபஞ்ச வடிவிலே கோளங்களாகவும் உயிர்களாகவும் காண்கிறான் இறைவன்.



குயவனின் சக்கரம் சுழன்று சுழன்று மண்ணுக்கு வடிவம் கொடுக்கிறது,

மனிதனின் மனம் சுழன்று உழன்று எண்ணங்களுக்கு வடிவம் கொடுக்கிறது.

பாலைவனத்தின் வழியே ஓடிய சிற்றாறு கடலை அடையாது நடு வழியிலேயே மண்ணுக்குள் மறைந்து விடுவது போல என் வாழ்வு அதன் குறிக்கோளை யடையாது மறைந்துவிடலாகாது.

அன்பனே, நித்யமாகிய பேரின்பக் கடலில் அது கலந்திட வழி காட்டுவாய்.



மின்னல் ஒளியைக் கண்டு மகிழ ஆசை கொண்டவன் இடியின் முழக்கத்திற்கும் தயாராக இருக்கவேண்டும்.

சிந்தனையும் சொல்லும் பறவையின் இரு சிறகுகள் போன்றவை.

ஒன்றில்லாதபோது மற்றொன்றால் பயனில்லை.



இழிந்த இச்சையை நோக்கி மனம் கேட்கிறது : "கரந்து நின்று எப்படி உள்ளே புகுந்தாய் ?"

இச்சை : "நான் கரவினிலே புகவில்லை. எனக்காக நீ கதவைத் திறந்து வைத்த போதுதான் உள்ளே நுழைந்தேன்."

குரல் இனிமையாக இல்லையே என்பதற்காக, கூவி உலகை எழுப்பும் தனது கடமையிலே காக்கை தவறுவதில்லை.



"கவிதையின் ஓவியம் போலக் கவின் பெருக்கி நடக்கும் ஆறே, ஓயாது உறங்காது நீ எங்கு செல்கிறாய் ?"

"எனது நாயகன் கடலரசனுடைய திருவடிகளைத் தொட்டு வணங்கி அவனோடு இரண்டறக் கலந்து இன்பமெய்த அவனை நாடிச் செல்கிறேன்."

“ஆற்றுக் கன்னியே, உன் வழியிலே குறுக்கே நிற்கும் கரும்பாறை ஒவ்வொன்ருேடும் என்னதான் பேசி வருகிருய் ?”

ஆறு : “எடுத்த காரியத்தில் வெற்றி காண வேண்டுமென்ற முயற்சி யுடையவர் களுக்கு எதிர் நிற்கும் தடை எதுவும் இல்லை என்று சொல்லி வருகிறேன்.”



கொன்றை மலர் பூத்துக் குலுங்கியது.

என்றைக்கு நாயகன் வருவான், என் றைக்கு அவனுக்கு விருப்பமான அப்பூக் களையே சூட்டி மகிழலாம் என்று ஏங்கிக் கிடந்த தலைவிக்குக் கொன்றைப் பூக்களே தீக் கொழுந்தாயின.

சேற்றுக் குட்டையிலே புரளும் பன்றி அந்தக் குட்டையையே சொர்க்கமாக எண்ணிக் கிடக்கிறது.

வானத்திலே உயர்ந்து பறக்கும் கருடன் அந்த நீலப்பெரு வடிவின் பாதத்தைக் கூடத் தொட முடியவில்லையே என்று ஏங்குகிறது.



கவிஞன் பூமியில் நின்றிருக்கிறான்; ஆனால் அவன் உள்ளம் வானிலே பறக்கிறது. அவன் அழகைப் படைக்கிறான்.

கழுகைப் போலச் சிலர் வானிலே பறக்கிறார்கள்; ஆனால் அவர்கள் உள்ளம் தரை மட்டத்திலே அழுந்திக் கிடக்கிறது. அவர்கள் அழிவைப் படைக்கிறார்கள்.

தந்தியிலே உள்ள இன்ப துன்பச் சேதிகளைப் பற்றித் தந்திச் சேவகன் கவலைப் படுவதில்லை.

தந்தியை உரியவர்க்கு வழங்கும் கடமை யொன்றில்தான் அவனுக்கு நாட்டம்.



இருட்டு நேரத்திலே கானகம் அமைதி யாகத் தோன்றுகிறதே என்று ஏமாற வேண் டாம்.

அப்பொழுதுதான் கொடிய விலங்கு களின் நடமாட்டம் அங்கே.

கதிரவன் காய்கிறுன் என்பதற்காகச் செடி அவனிடம் சினம் கொள்ளுவதில்லை.

தனக்கு உயிர் கொடுப்பவன் அவனே என்று அதற்குத் தெரியும்.



வாழ்க்கைத் திரையிலே பல வண்ணங்களைக் குழைத்து மனம்போன போக்கிலெல்லாம் தீட்டிக் கொண்டிருக்கிறேன்.

அதற்குப் பொருள் கண்டுபிடித்து மதிப்பிடும் திறனுய்வாளன் கருணையோடு பார்ப்பான் என்பது எனது நம்பிக்கை.

மலர் கேட்கிறது: "சிரிப்பே, நான் இதழ் விரிந்து மலரும் வரை நீ எங்கிருந்தாய்?

சிரிப்பு: "நான் உன் உள்ளத்திலேயே ஒளிந்திருந்தேன்."



மலையருவி திடுதிடென்று பேரிரைச்சலோடு விழுகிறது.

அச்சந்தரும் அதன் முழக்கத்திலே ஓம் என்ற ஒலி உருவாகிறது.

குயிலுக்குக் கூடுகட்டத் தெரியாது.

முட்டையிட்டுத் தன் இனத்தை அழிந்து போகாமல் காப்பதற்கு அதற்கு வேறொரு திறமை கிடைத்திருக்கிறது.



மேனி அழகு ஒரு மெல்லிய மலர் போன்றது. எட்டி இருக்கும் வரை கண்ணைக் கவர்கிறது. கரத்தில் அகப்பட்டவுடன் வாடத் தொடங்குகிறது.

உண்மையைப் பேசுவதற்கு அச்சம் தடையாக நிற்கிறது.

உண்மையைப் பேச அஞ்சியவன் பொய்யைப் பேசிவிட்டு அதனால் மிகப்பெரிய அச்சத்தை அடைகிறான்.



தேன் திருடும் வண்டு மலர் காயாகமாற மகரந்தப் பொடியிட்டு உதவுகிறது.

தேன் திருடும் மனிதன் புகையிட்டுத் தேனீயை வதைக்கிறான்.

கேட்டதை யெல்லாம் கொடுக்க வில்லையே என்று குழந்தை வருந்துகிறது.

கேட்டதை யெல்லாம் கொடுத்தால் குழந்தைக்கு ஆகாதே என்று தாய் வருந்து கிருள்.



கடவுள் நம்பிக்கை அற்றவனுக்கும் ஒரு கயிலாயம் இருக்க வேண்டும்.

அவனும் ஒரு குறிக்கோளை நாடி உயர்ந்து செல்லவேண்டு மல்லவா?

போரிலே வெற்றி பெற்ற நாடுகள் தோல்வியுற்ற நாடுகளைச் சுமக்கின்றன.



“ சாவே, உன்னைக் கண்டு அஞ்சாதவர்கள் உண்டா ?”

“ கடவுள் நினைவிலே நிலைத்தவர்களுக்கு என்னிடம் அச்சமில்லை ; இடையறாத இன்பத்திற்குச் செல்லும் வாயிலாகவே அவர்கள் என்னை மதிக்கிறார்கள்.”

ஓவியச் சாலையில் ஓர் அழகிய ஓவியத்தைக் கண்டு மகிழ்ந்தவன், அதை விலை கொடுத்து வாங்கித் தன் வீட்டிலே வைத்து அது களவு போகாமலிருக்க வேண்டுமே என்று கவலைப்பட்டுக் கொண்டிருக்கிறான்.



உன்னுடைய முகக் கோணலுக்காகக் கண்ணாடியைப் பழிக்காதே.

இருண்ட மலைக் குகைக்குள்ளே யிருந்து சீறிக்கொண்டிருக்கும் நச்சுப் பாம்புகள் போல மனக்குகையின் ஆழத்திலே நின்று இழிந்த இச்சைகள் குமுறிக்கொண்டிருக்கின்றன.

மனச் சான்று என்ற பாம்பாட்டியின் வலிமையால்தான் அவை கட்டுண்டிருக்கின்றன.



நண்பா, வாழ்க்கைக் கடலின் கொந்தளிப்பையும் குமுறலையும் பொருட்படுத்தாது நேராக இந்த ஓடம் செல்வதற்கு உன் அன்பின் திறம் என்றும் மாருமலிருக்கட்டும்.